2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798

கதிர் 13 மதுரை 15 5—75 வியாழன் மலர் 87

## தாய்லாந்தில் அமெரிக்க தளம் மூடப்படும்

பாங்காக், மே. 12—

தாய்லாந்தின் உபோனில் உள்ள அமெரிக்க விமான ராணுவத் தளம் இவ்வாண்டு ஜூன் கடைசியில் மூடப்படவிருக்கிறது என சோவியத் யூனியனின் 'டாஸ்' ரேடியோ நிலையம் அறிவித்தது.

## இந்தியாவுக்கு புரட்சி அரசின் தூதுக்குழு

புதுடெல்லி, மே. 12—

தென்வியட்னாம் புரட்சி அரசின் தூதுக்குழு ஒன்று வோ ஹெய் ஹீன் தலைமையில் மே. 15 இந்தியா வருகிறது.

அத்தூதுக் குழுவினர் இந்தியா வந்ததும் அவர்களோடு கலந்து பேசிய பின்பு ஹோ-சி-மின் நகரில் உள்ள இந்தியத் தூதுக்குழுவை தூதரக மட்டத்தில் மாற்றியமைக்கப்படும்,

வரக்கூடிய தூதுக் குழுவினருக்கு தூதர் அலுவலகங்கள் அமைத்து தருமபடி இந்திய அரசை தென்வியட்னாம் புரட்சி அரசு கேட்டுக்கொண்டுள்ளது. அதன்படி இந்திய அரசும் அதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்கிறது.

# அண்டை நாடுகளில் கோலோச்சும் பூட்டோ, முஜிபுர், சிரிமாவோ செல்லும் ஒரு கட்சி சர்வாதிகாரப் பாதையே இந்திரா காந்தி செல்லும் பாதையும்

## தோழர் பி.டி. ரணதிவே உரை

சத்தார் நகர் (கோழிக்கோடு) மே. 13 —

'அண்டை நாட்டு ஆட்சியாளர்களான பங்களாதேஷ் முஜிபுரும், பாகிஸ்தான் பூட்டோவும், ஸ்ரீலங்கா சிரிமாவோவும் செல்லும் ஒரு கட்சி சர்வாதிகாரப்பாதைதான் இந்தியப் பிரதமர் இந்திரா செல்லும் பாதையும்'— என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினரும், சி ஐ டி யூ வின் அகில இந்தியத் தலைவருமான தோழர் பி. டி. ரணதிவே கூறினர்.



கடந்த 10-ந் தேதியன்று கேரள மாநிலம் கோழிக்கோடு நகரில், கேரள அரசுப் போக்குவரத்து ஊழியர் சங்கத்தின் (சி ஐ டி யூ) 7-வது மாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசுகையிலேயே தோழர் பி. டி. ரணதிவே மேற்கண்டவாறு கூறினர். மேலும் அவர் கூறியதாவது:

பங்களாதேச முஜிபுர் ரஹிமான் கூறுகிருர், பங்களாதேசில் ஒரு கட்சியே போதுமென்று; அதையே பாகிஸ்தான் அதிபர் பூட்டோவும், இலங்கைப் பிரதமர் திருமதி பண்டாரநாயகாவும் கூறுகிருர்கள். பின்னே 'பாரத மாதா' மட்டும் கூருமல் இருப்பாரா? அவரும் கூறுகிருர் இந்தியாவில் ஒரே கட்சியும், ஒரே தொழிற்சங்கமும் போதுமென்று. அவர் கூறுகின்ற அந்த ஒரே கட்சியும், ஒரே தொழிற்சங்கமும் அவருடையது மட்டுமே தான்.

பாகிஸ்தான் பூட்டோவும், பங்களாதேஷ் முஜிபுரும், ஸ்ரீலங்கா சிரிமாவோவும் எதிர்க்கட்சிகளை நசுக்கிக்கொண்டு தங்களது சர்வாதிகாரத்தை ஸ்தாபிக்கின்றனர். 'பாரத மாதா' இந்திராவும் அந்தப் பாதையிலேதான் செல்லுகிருர்.

ஒரு தொழிலில் ஒரு சங்கம் — அரசாங்கத்தின சங்கம் — போதும் என்கிறவாதமும், போராட்டங்களைத் தள்ளி வைக்க வேண்டுமென்று கூறுகின்ற பல்லவியும், ஒரே கட்சியின் ஆட்சியையும் பாசிஸத்தையும் நோக்கி செல்கின்ற முயற்சிகளேயாகும்.

இந்தியாவில் பல தொழில்களில் ஓய்வு பெற்ற இராணுவ அதிகாரிகளை நியமிக்கின்றனர். இந்திய விமானத் துறையில் தலைவராக நியமிக்கப்பட்ட ஏர்மார்ஷல் லால் கூறுகிருர்: கோரிக்கை போராட்டங்களை நடத்துவதற்கான உரிமை தொழிற்சங்கங்களுக்கு இல்லை என்று. கொடுப்பதை வாங்கிக்கொண்டு வேலை செய்ய வேண்டுமென்கிருர்.

கடந்த, இரயில்வே தொழிலாளரின் போராட்டத்திற்கு பிறகு, எல்லைப்புற இராணுவத்தின் நக்கும், மற்ற இராணுவத்தின நக்கும் இரயிலை ஓடுவதற்கும் தொழிற்சாலைகளை இயக்குவதற்குமான பயிற்சிகள் அளிக்கப்பட்டு வருகின்றன. இத்தகைய போக்குகள் எதைக் காட்டுகின்றன? தொழிலாளிவர்க்கத்தின் ஒன்றுபட்ட வலிமையைச் சிதைத்து, ஒரு சர்வாதிகார ஆட்சியை நடத்துவதற்கான ஆளும் கட்சியின் முயற்சியையே காட்டுகின்றன.

### மேற்கு வங்கத்திலும் கேரளத்திலும்

இடதுசாரி முற்போக்கு சக்திகளைத் தகர்த்தாலே ஆதைச்சாதிக்க முடியும் என்று தோன்றியதால்தான் மேற்கு வங்கத்திலும், கேரளத்திலும் காங்கிரஸ் அரசு அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டிருக்கிறது.

சி. ஐ. டி. யூ. சங்கம் பெரும் செல்வாக்கு பெற்றுள்ள துர்க்காபூரில் கூட சங்க அலுவலகத்தைத் திறந்து செயல்படுவதற்குகூட போலீசும் அனுமதிக்கவில்லை. மக்களின் பிரதிநிதிகள் மீதும் தொழிற்சங்கத் தலைவர்கள் மீதும் கொலை வழக்குகள் வரை பல பொய் வழக்குகள் தொடுக்கப்பட்டுள்ளன.

தொழிற்சங்கங்கள் இயங்குவதற்குக் கொடுக்கப்பட்டுள்ள உரிமைகளையெல்லாம் பறிக்க இந்திரா அரசு கருதியுள்ளது அரசாங்கத் தொழிற்சங்கமே போதும் என்ற திரைமறைவில் அதைச் செய்ய இந்திரா அரசு திட்டமிட்டிருக்கிறது. ஊதிய முடக்கச் சட்டம் போட்டிருப்பதே அதற்காகத்தான் நாட்டை ஒரு போலீஸ் ராஜ்யமாக்கவும் அரசு முயலுகிறது.

அவர் மேலும் பேசுகையில் கூறியதாவது:—

### தொழிலாளி வர்க்கப் பணி என்ன?

அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்க எல்லா கட்சிகளும் ஒன்று சேர்ந்து போராடவேண்டும். அதனுடன், மக்களுக்கு எதிரான அரசாங்கத்தின் அடிப்படைக் கொள்கைகளைத் தோல்வியுறச் செய்ய, இடதுசாரி ஜனநாயக சக்திகளை ஒன்று திரட்டி போராடவேண்டும். இவைதான அரசாங்கத்தின் அச்சுறுத்தலை ஒருகை பார்த்திட தொழிலாளி வர்க்கம் செய்ய வேண்டிய பணி.

தொழிலாளி வர்க்கத்தின் ஒன்றிணைந்த அணியை உருவாக்கும் போது, ஏ. ஐ. டி. யூ. சி. யின் ஐ என் டி யூ சி யின் வர்க்க சமரசத்தைத் திரை கிழித்துக் காட்டவும், தோல்வியுறச் செய்யவும் முடியும்.

தொழிற்சாலை தோறும் அதிகக் கூலிக்கு மட்டும் போராட்டங்கள் நடத்தி அதிலேயே முடங்கிகிடப்பதல்ல சிஐடியூ. அரசாங்கத்தின் அக்கிரமங்களை எதிர்த்து அது போராடும். ஏகபோக முதலாளிகளைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் கொள்ளைச் சுரண்டலைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் சிஐடியூ போராடும்.

இவ்வாறு தோழர் பி டி ரணதிவே பேசினர்.

## 3 வேலைவாய்ப்புத் திட்டங்கள் முடிந்தும் இரண்டே வருடத்தில் வேலையின்மை பெருகியதோ 28 சதவீதம்

புதுடெல்லி மே. 8—

படித்தவர்களுக்கு வேலை வாய்ப்பு திட்டங்களென மத்திய அரசும் மாநில அரசுகளும் கடந்த 3 ஆண்டுகளாக விசேஷத் திட்டங்களை தீட்டியதும் நடத்தியதும் வெறும்பிரச்சாரமாகவே முடிந்ததேயன்றி வேலையில்லாத் திண்டாட்ட அதிகரிப்பு வேகத்தை குறைக்க முடியவில்லை.

கடந்த இரண்டு ஆண்டுகளில் மட்டும் வேலை தேடித் தருவோர் அலுவலகங்களில் வேலை கோரி பதிந்துள்ளவர்களின் எண்ணிக்கை கிட்டத்தட்ட 28 சதவீதம்உயர்ந்துள்ளது.

வேலை தேடித்தரும் நிலையத்தில் பதிந்தோரில் பலர் பல்வேறு வழிகளில் எப்படியேனும் வேலையில் அமர்ந்து விட்டால் வேலை தேடித் தரும் நிலையத்திலிருந்து தனதுபெயரை வாபஸ் பெற்றுக் கொள்வதில்லை. அதே சமயத்தில் வேலையின்றி இருந்தோர் ஏராளமானோர் தங்கள் பெயர்களை வேலைத் தேடிதரும் நிலையங்களில் பதிவு செய்வதில்லை. இதையெல்லாம் கணக்கில் கொண்டு பார்த்தல் 1972-ம் ஆண்டு டிசம்பர் 31-ந் தேதி வரை நாட்டில் வேலையின்றி இருப்போர் எண்ணிக்கை 8 கோடியே 27 லட்சத்து 42 ஆயிரம் பேராகும்.

இந்த எண்ணிக்கை1974-ம் ஆண்டு டிசம்பர் 31ம் தேதி வரையான கணக்குப்படி 4 கோடியே 17லட்சத்து 47 ஆயிரம் பேராகும்.

இரண்டே வருடங்களில் வேலையின்றி வீதியில் அலைவோரின் எண்ணிக்கை 27.50 சதவீதம் உயர்ந்துவிட்டது.

படித்துவிட்டு வேலையின்றி இருப்போரின் எண்ணிக்கை மேற்குவங்கத்தில் தான் அதிகம் உள்ளனர் 1972-ம் ஆண்டில்64லட்சத்து 75 ஆயிரம் பேர் படித்து விட்டு வேலையின்றி இருந்தனர். 1974-ல் அவர்களின் எண்ணிக்கை 76 லட்சத்து 56 ஆயிரமாக உயர்ந்து விட்டது,

ஆனல் வேலையின்றி

(2-ம பக்கம் பார்க்க )

## சீன—சோவியத் தகராறு: எந்தப் பக்கமும் சேர்வதில்லை என புரட்சி அரசு

ஹோசிமின்நகர், மே. 12—

சீனவுக்கும்சோவியத் யூனியனுக்குமிடையே உள்ள தகராறுகளில் தென்வியட்னாம் புரட்சி அரசு எந்தவொரு பக்கமும் சாயாது என்றும் அனைத்து நாடுகளுடனும் நட்புறவு கொள்ளும் என்றும் புரட்சி அரசை சேர்ந்த லெப்டினன்ட் ஜெனரல் வான் டிரா அறிவித்தார்.

## வியட்னும் தூதரகம் சென்று மாணவர் சங்கம் வாழ்த்து

புதுடெல்லி, மே. 12—

'பொம்மை அரசு விழுந்தது, புரட்சி அரசு வென்றது' என்ற பூரிக்கும் நற்செய்தி எட்டியவுடனேயே ஆயிரக்கணக்கான மாணவர்கள் இந்திய மாணவர் சங்க கொடிகளையும் பதாகைகளையும் ஏந்திக் கொண்டு இடி முழக்க வாழ்த்தொலிகளுடன் ஊர்வலமாகச் சென்று—புதுடில்லியிலுள்ள வியட்னும் ஜனநாயகக் குடியரசு (வடவியட்னும்) தூதரகத்திற்குச் சென்று தங்களது வாழ்த்துக்களை கூறினுர்கள்.

வட்வியட்னும் தூதர் மாணவர்களின்வாழ்த்துக்களை மகிழ்ச்சியுடன ஏற்றுக்கொண்டதோடு, மாணவர்கள் மத்தியில், விடுதலைப்படைகளின் வெற்றியின் முக்கியத்வத்தை எடுத்துரைத்தார்.

இந்திய—வியட்னுமிய பாடல்கள் பாடப்பட்டன.

மறுநாள் மேதினத்தன்று சி. ஐ டி யூ. தொழிலாளர்களும் மாணவர்களும், வியட்னும் தூதரகத்தின் முன்னல் சென்று, வெற்றிவாழ்த்துக்கள் கூறி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கன. இந்தக் கூட்டத்திலும் வியட்னும் தூதர் பேசினுர்.

கல்கத்தாவில், வெற்றிநாளான ஏப்ரல் 30-ல்இந்திய மாணவர் சங்கக் கட்டிடம் வண்ணவிளக்குகளால் ஒளி வீசித்திகழ்ந்தது. கட்டிடத்தின் உச்சியில தென் வியட்னும் புரட்சி அரசின் கொடி கம்பீரமாகப் பறந்தது நள்ளிரவு வரையும வாணவேடிக்கைகளும் பட்டாசு வெடிகளும கோலாகலமாய் நடந்தன. புரட்சி கீதங்கள் இரவு வெகு நேரம் வரையும் இசைக்கப்பட்டன. புது டில்லி தூதரகத்துக்கு வாழ்த்துத் தந்திகளும் அனுப்பப்பட்டன.

## அகில இந்திய தோட்டத் தொழிலாளர் மாநாடு: பல்லாயிரமவர் திரண்ட பேரணி

கே ஐ ராஜன் நகர், (வண்டிப்பெரியார்) மே. 11—

அகில இந்தியத் தோட்டத் தொழிலாளர்சங்க (சிஐடியூ) 2வது மாநாடு, இந்தியா முழுவதிலுமிருந்து வந்திருந்த பிரதிநிதிகள் முன் செல்ல — அவர்களையடுத்து பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் அணிவகுத்து வந்த பேரணியுடன கே. ஐ ராஜன் நகரில் துவங்கியது.

மாநாட்டின் முதல்நாளான 11-ந் தேதியன்று நடந்த இந்தப் பேரணியில பெண்கள் மட்டும் சுமார் 10 ஆயிரம் பேர் கலந்து கொண்டனர்.

கேரள மாநில தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் பொதுச்செயலாளராக இருந்து, திடிரென மாரடைப்பு காரணமாக இயற்கையெய்திய தோழர் கே. ஐ ராஜன அவர்களின் நினைவு ஸதூபியிலிருந்து பேரணி புறப்பட்டது.

வண்டிப பெரியாரிலிருந்து 5 மைல் தூரத்தில் இருக்கும்பாம்பனுரில் உள்ள இந்த நினைவு ஸ்தூபிக்கு அஞ்சலி செலுத்திவிட்டு— செங்கொடிகளையும் பதாகைகளையும் தாங்கிக்கொண்டும் உரிமை முழக்கங்களையும் கோரிக்கைமுழக்கங்களையும் எழுப்பிக்கொண்டும் வண்டிப்பெரியார் வந்தடைந்தது பேரணி,

### மதுரையிலிருந்து தோழர்கள்

மூணுறு, பீர்மேடு, தேவிகுளம, மதுரை மற்றும் பல பகுதிகளிலிருந்து லாரி, வேன, பஸ்கள் மூலம் ஏராளமான தோழர்கள் வந்திருந்தனர்.

இரவில், வண்டிப்பெரியாரில் கே. ஐ. ராஜன் நகரில் அகில இந்தியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தலைவர் தோழர் கே. பதமநாபன் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது,

சி ஐ டி யூ தலைவர் பி. டி. ரணதிவே, பொதுச் செயலாளர் பி ராமமூர்த்தி அகில இந்தியத் தோட்டத் தொழிலாளர் சங்கப் பொதுச்செயலாளர் மனேரஞ்சன் ராய் எம். பி., தமிழக சி ஐ டி யூ துணைத்தலைவர் ஏ. பாலசுப்பிரமணியம்

(2-ம் பக்கம் பார்க்க)

## தேயிலை ஏற்றுமதியில் அன்னிய செலாவணி மோசடி நிருபர்களிடம் தோழர் பி. ராமமூர்த்தி

வண்டிப்பெரியார், மே. 12—

நாற்று நடுதல் போன்ற ஆரம்ப வேலைகளைக் கூட பெரும்தேயிலைதோட்டங்கள் செய்வதில்லை என்றும் அதிக பட்ச லாபத்தையே குறியாக கொண்டுள்ளன என்றும சி. ஐ. டி. யூ. பொதுச்செயலாளர் தோழர்பி.ராமமூர்த்தி இங்கு நிருபர்களிடையே பேசுகையில் குறிப்பிட்டார்.

மேலும் ஏராளமான தேயிலைத்தோட்டங்களில தவருன வகையில் நிர்வாகங்கள் நடத்தப்படுவதால் அவைகளில் சில தோட்டங்கள் மூடப்பட்டுவிட்டன என்றும் கூறினுர்,

வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் தேயிலை பற்றிய கணக்குகளில் மோசடி செய்யப்படுகின்றன நாட்டில் உற்பத்தியாகும் தேயிலையில பெரும்பகுதி ஏற்றுமதி செய்யப்படுகிறது, ஆனல் அது பற்றிய கணக்குகள் குறைத்துக்காட்டப்படுகிறது. இதன் மூலம் நாட்டின்வளர்ச்சிக்கு தேவையான அன்னிய செலவாணியில் நஷ்டம் ஏற்படுகிறது என்றும தோழர் பி. ஆர். குறிப்பிட்டார்.

இவ்வாறு அன்னியச் செலவாணி நஷ்டம தேயிலை துறையில மட்டும் வருடத்திற்கு குறைந்த பட்சம ரூ 50 கோடி ஏற்படும என்றும் இப்படி தேச சொத்துக்கு ஏற்படும் நஷ்டத்துக்கு ஒரு முடிவு காண வேண்டும என்று அவர் கூறினுர்.

மேலும் 1974-ம ஆண்டில் தேயிலை விலை கூட்டப்பட்டு தேயிலைத்தோட்ட முதலாளிகள் பெரும கொள்ளை லாபம் அடைந்துள்ளனர் ஆனலும் கூட தேயிலைத் தோட்ட தொழிலாளர்களுக்கு ஒரு நியாயமான சம்பளம கொடுக்கத்தோட்ட முதலாளிகள மறுத்தனர் என்றும் தோழர் பி. ஆர். குற்றம் சாட்டினுர்.

## கியூபா மீது தொடுக்கப்பட்ட அமெரிக்க பகிஷ்காரம் வாபஸ்?

வாஷிங்டன். மே. 11—

சென்ற 11 ஆண்டுகளாக சோசலிச கியூபா நாட்டைப் பொருளாதாரப் பகிஷ்காரம் செய்து வந்த அமெரிக்கா, வியட்நாமிலும், கம்போடியாவிலும் வாங்கிய அடிக்குப்பின்னர், தன்னுடைய சென்றகாலக் கொள்கையை மாற்றிக் கொள்ளப் போவதாக அறிவித்துள்ளது.

அமெரிக்க நாடுகளின் ஸ்தாபனத்தில் ஜனாதிபதி போர்டு பேசுகையில ஒவ்வொரு நாடும் தான் விரும்பும் அரசையும், கொள்கையையும பின்பற்ற அதற்கு முழு உரிமை உண்டு என்றார். வெளி விவகார அமைச்சர் டாக்டர் கிசிஞ்சர், கியூபா விஷயத்தில ஏனைய லத்தீன் அமெரிக்க நாடுகளுடன் சேர்ந்து நின்று இதுவரை அமெரிக்கா [யு எஸ் ஏ] கியூபா மீது பொருளாதாரப் பகிஷ்காரம நடத்தி வந்ததை வாபஸ் வாங்கப் போவதாக அறிவித்தார்.

## காங்கிரசின் மதிப்பு எத்தனைக் காசு?

கோழிக்கோடு, மே. 13—

ரூபாயின் மதிப்பு 25 பைசாவாக குறைந்துவிட்டதென்று நிதி அமைச்சர் சுப்பிரமணியம் கூறுகிருர். அப்படியென்ருல் அந்த சுப்பிரமணியத்தின் மதிப்பு எத்தனை பைசா? ஒரு பைசாவோ!

காங்கிரசின் மதிப்பு என்னவாக இருக்கும்? இரண்டு பைசாவோ? காங்கிரஸ் கட்சியின் மதிப்பு இரண்டு பைசா என்ருல், வலது கம்யூனிஸ்ட் கட்சியின் மதிப்பு என்ன? அரைப பைசா அல்லவா?

பி. டி. ரணதிவே

(கேரளத்தில் கோழிக்கோடு நகரில் அண்மையில் நடந்த ஒருபெரிய பொதுக்கூட்டத்தில் பேசியது.(

# தீக்கதிர்

## மேதினப் பரிசாக லாவோசும்கிடைத்தது

கம்போடிய வெற்றியை அடுத்து தென்வியட்நாம் வெற்றி—தென் வியட்நாம் வெற்றியையடுத்து லாவோசிலும் மகத்தான வெற்றி ஏற்பட்டிருக்கிறது. கடந்த 20 ஆண்டுகளாக ஆயுதம் ஏந்தி நடத்தி வந்த பாதெட்லாவோ எனும் தேசபக்தப்படைகள், அமெரிக்க ஆதரவு வலதுசாரிப் பிற்போக்குக் கும்பல்களை ஒழித்துக்கட்டுவதில் வெற்றி பெற்றுவிட்டன,

வடக்கே சீனாவையும் பர்மாவையும்—கிழக்கே வடவியட்நாமையும் தென் வியட்நாமையும்—தெற்கே கம்போடியாவையும்—மேற்கே தாய்லாந்தையும் எல்லையாகக் கொண்டு—ஏறக்குறைய வடவியட்நாம் நாட்டின் நிலப்பரப்பு அளவுக்கு உள்ள லாவோஸ் நாட்டில் புரட்சிகரமான மாற்றம் ஏற்பட்டிருப்பது மகத்தான முக்கியத்துவம் வாய்ந்தது ஆகும்

20 ஆண்டுகளுக்கு முன்னே இப்பகுதியிலிருந்து பிரஞ்சுக்காரர்கள் போன பிறகு—வியன்டியானே நகரை தலைநகராகக் கொண்டு, மன்னன் தலைமையில் பிற்போக்காளர்களின் இராணுவ ஆட்சி ஏற்பட்டது. கம்யூனிஸ்டு கட்சி தலைமையில் ஜனநாயக உரிமைகளுக்காக மக்கள் போராடவே-அவர்கள் மீது கொடிய அடக்குமுறைகளை கட்டவிழ்த்துவிட்டது கொடுங்கோன்மை எல்லைமீறிச் செல்லவே, உள்நாட்டுப்போர் மூண்டது. கம்யூனிஸ்டுகள் பாதெட்லாவோ என்ற தேசபக்தர் படையை அமைத்துக் கொண்டு, இராணுவ ஆட்சியை எதிர்த்து கொரில்லாப் போர் நடத்தினர்கள் இந்தப்போரில் லாவோஸ் நாட்டின் மூன்றில் இரண்டு பங்கு நிலப்பரப்பைக் கைபற்றிக் கொண்டு, சொந்த ஆட்சியதிகாரத்தையும் நிறுவிக் கொண்டார்கள்.

கம்யூனிஸத்தை விஷமென வெறுக்கும் பிற்போக்கு ஆட்சியானது. பாதெட்லாவோ வசமுள்ள பிரதேசங்களை கைப்பற்ற தொடர்ந்து போரிட்டு வந்தார்கள். அவர்களது முயற்சி அத்தனையும் தோல்வியுற்ற பின், 1973ம் ஆண்டில் பாதெட்லாவுடன் மன்னராட்சி ஒரு உடன்பாட்டுக்கு வந்து—இருதரப்புக்கும் பாதிக்குப் பாதி என்று சமரச மேற்பட்டது.

அதன்படி கம்யூனிஸ்டுகளையும் நடுநிலைமை வாதிகளையும் வலதுசாரிகளையும் கொண்ட கூட்டு சர்க்கார் ஏற்பட்டது. இந்த சர்க்காரில பாதுகாப்பு இலாகாவும், நிதி இலாகாவும் வலதுசாரிகள் கையிலே இருந்தது.

இந்த வலதுசாரி மந்திரிகள், கூட்டு சர்க்காரில் இருந்து கொண்டே, பாதெட்லாவோ பிரதேசங்களைக் கைப்பற்ற படைகளை ஏவினர்கள். கலவரங்களைத் தூண்டி நெருக்கடிகளைச் சிருஷ்டித்தார்கள். குழிபறிக்கும் இத்துரோகச் செயல்களுக்கு அமெரிக்காவிடமிருந்து 6 கோடி டாலரும், அமெரிக்க அடிவருடியான தாய்லாந்து சர்க்காரின் உதவிகளும் கிடைத்தன,

இந்த நிலையில்தான் கம்போடிய கெமர் படைகளும்,தென்வியட்நாமிய விடுதலைப்படைகளும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளை விரட்டியடித்தும் அவர்களின் கைப்பாவைகளை ஒழித்துக் கட்டியும் வெற்றிக் கொடி நாட்டினர்கள்.

இதைக்கண்டு குலைநடுங்கிய வலதுசாரிகள், கூட்டு மந்திரிசபையிலுள்ள கம்யூனிஸ்டு முதலான இடதுசாரியினரை இராணுவப் புரட்சி மூலம் திடீரென்று கவிழ்த்துவிட சதித்திட்டம் வகுத்தார்கள். இச்சதிக்கு தாய்லாந்து அரசினரும் உடந்தையாக இருந்தனர்

இச்சதித்திட்டத்தையறிந்த பாதெட்லாவோ தலைவர் சொம்பன வாங் சதியை முறியடிக்க முன்வருமாறு நாட்டு மக்களுக்கும் மன்னர் அரசாங்கப் படைகளுக்கும் வேண்டுகோள் விடுத்தார் மக்கள் வலதுசாரிகளுக்கு எதிராக பொங்கியெழுந்தார்கள் மன்னர் அரசாங்கப் படையைச் சேர்ந்த பல்லாயிரக்கணக்கான சிப்பாய்கள், தத்தம் பிற்போக்கு தளபதிகளுக்கெதிராக கலகம் செய்துவிட்டு படைமுகாமகளை விட்டு வெளியேறி பாதெட்லாவோ படைகளை வரவேற்று மார்புறத்தழுவிக் கொண்டனர்.

இந்த நிலையில்தான் பிரதம மந்திரிமான சுவன்னபூமா முன்வந்து''20 வருட போராட்டத்தை முடிவுக்குக் கொண்டுவரும்படியான புது நிலைமை ஏற்பட்டிருக்கிறது யதார்த்த உண்மைகளைபார்ப்பது அவசியம். சரித்திரப் போக்குடன் ஒத்துப்போகவேண்டும் யுத்தத்தை நிறுத்துங்கள்''—என்று அறிக்கை விட்டார் .மன்னர் சவால் வத்தனவும் இதற்கு சம்மதித்தார்,

சதித்திட்டம் தகர்ந்துபோனதால், பாதுகாப்பு மந்திரி சிசூக் நா சாம்பசாக்கும் நிதி மந்திரி நிகோன சனனிகோனேயும் ராஜினாமா செய்துவிட்டு, தாய்லாந்துக்கு ஓடிவிட்டார்கள் மற்றும் பல பிற்போக்கு தளபதிகளும் அதிகாரிகளும் ராஜினாமாசெய்து விட்டு ஓடிவிட்டார்கள்.

கூட்டு அரசாங்கத்தில் பாதெட்லாவோதான் பலமிக்க சக்தியாக இருந்தாலும், சுவன்னபூமாவே தொடர்ந்து பிரதமராக இருக்கக்கூடும்.

இனிமேல் லாவோஸ் மக்களின் முன்னேற்றப் வெகுதுரிதமாகஇருக்குமென்று நம்பலாம் ஓடிப்போன பிற்போக்காளர்களும் சரி, ஓடிப் போகாமல் இருக்கும் பிற்போக்காளர்களும் சரி, இன்றைய உள்நாட்டு வெளிநாட்டு பலாப்பலத்தையும் மாறுதலின் வேகத்தையும் முன்வைத்துப் பார்க்கின்றபோது, காலக்கிரமத்தில் பின்வாங்கி, அரங்கத்திலிருந்தே ஒழிந்துபோகக்கூடிய நிலைமைதான் ஏற்படுமென்பதில் ஐயமில்லை.

மேதினப் பரிசாக கம்போடியாவும், தென்வியட்நாமும் மாத்திரமல்ல லாவோசும் உலகத் தொழிலாளருக்கு கிடைத்து இருக்கிறது.

---

## உடுமலை ஏ.கே.ஜி. மன்றத்தாரின் 'செவ்வானம்' நாடகம்

உடுமலைப்பேட்டை மே: 11—

உடுமலைப் பேட்டையில் உள்ள மில் தொழிலாளர்கள் ஏ கே, ஜி. நாடகக் கலைக்குழு ஒன்று ஆரம்பித்துள்ளார்கள் தோழர் கே, முத்தையா அவர்களால் எழுதப்பட்ட செவ்வானம் நாடகத்தை மே 1ம் தேதி வெகு சிறப்பாக நடத்தினர்கள் நல்ல பயில்சிபெற்ற நாடகக்கலைஞர்களைப் போலவே வெகு திறமையுடன் இநாடகத்தை நடத்தினர் என்று தலைமை வகித்த தோழர் கே முத்தையா பாராட்டினர் நாடகம்ஆரம்பமாவதற்கு முன்பு சிறப்பான மேதின ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றது' பொதுக் கூட்டத்திற்கு தோழர் வெங்கடாசலம் தலைமை வகித்தார்.

---

அதிகாரிகள் — 'துரை'மார்களின் அடக்குமுறைகளை எதிர்த்து

## மலைவாழ் விவசாயிகளின் உரிமை முழக்கம்

ஆத்தூர்- மே. 11—

சேலம்- தர்மபுரி மாவட்டத்திலுள்ள மலைவாழ் விவசாயிகளின் மாநாடு ஆத்தூரில் மே 2-ம் நாள் நடைபெற்றது. இந்த மாநாட்டிற்கு கொல்லிமலை, கன்வராயன் மலை சேர்வராயன்மலை கூட மலை ஆகிய மலைகளிலிருந்து 150 க்கு மேற்பட்ட விவசாயிகளின் பிரதிநிதிகள் வந்திருந்தனர்,

கொல்லிமலை விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் ஸ்ரீரங்கன் இம்மாநாட்டிற்கு தலைமை வகித்தார்,

### கே முத்தையா உரை

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலசெயற்குழு உறுப்பினர் தோழர் கே முத்தையா மாநாட்டில்சிறப்புரையாற்றினர்.

அவர் பேசுகையில், மலைப் பிராந்தியங்களில் வாழும் ஆயிரககணக்கான மக்களுக்கு சுதந்திரம் அடைந்த பின்னரும் கூட எந்த முன்னேற்றமும் கிட்டவில்லை. பண்டைக்காலத்திய அடிமைச் சமுதாய வாழ்க்கை நிலைதான் அங்கு நிலவுகிறது. நாட்டான், கவுண்டன் மூப்பன், துரை என்ற பெயர்களில் அடிமை எசமானர்கள் மலைவாழ் விவசாயிகளைக் சுரண்டி வருகின்றனர். பன்னெடுங்காலமாக அவர்கள் உழுது வரும் நிலம் அவர்களுக்குச் சொந்தமில்லை. கவுண்டத் துரைகளுக்கேச் சொந்தம்.

ஒரு விவசாயி வீட்டில் திருமணம் நடக்கிறதென்றல் மேற்கூறிய ஊருக்கு எசமானகிய கவுண்டன் துரைக்கு 200 ரூபாயும் ஒரு கிடாயும் பரிசாகக்கொடுக்க வேண்டுமாம். மற்றொரு ஊரிலிருந்து ஒருவன் குடியேற வேண்டுமானல் அவன் மேற்கூறிய துரைக்கு பரிசு கொடுக்கவேண்டுமாம்.சாதாரண வாழ்க்கை முறையில் இந்தக் கவுண்டன் துரைகள் வைத்ததுதான் சட்டம். ஒரு கணவன் இறந்து விட்டால் அவனது மனைவி அவன் இறந்து போன ஒரு மாதத்திற்குள் தனக்கு ஒரு புதிய கணவனை தேர்ந்தெடுத்து அறிவித்தால்தான் அவள் இதுவரையில் தான் வாழ்ந்து வந்த குடிசையில் வாழ முடியும்,

இது போன்ற பல அடக்குமுறைகளும் ஒடுக்குமுறைகளும், தலைவிரித்தாடுவதோடு இங்கு அரசாங்கத்தால் அமர்த்தப்பட்ட போலீசும், அதிகாரியும் விவசாயிகளை பல்வேறு துறைகளிலும் அடக்குகிருர்கள். மலைவாழ் மக்களுக்கு சுகாதாரநிலையங்களோ, பள்ளிகளோ கிடையாது. இந்த குறைகளைப் போக்க — இந்த அடக்குமுறைகளை எதிர்க்க விவசாயிகளை தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தில் சேர்ந்துபோராட வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.

### மற்ற தலைவர்கள்

இந்த மாநாட்டில்மாவட்ட மார்க்சிஸ்ட் கட்சிச் செயலாளர் தோழர் கே. எஸ். அர்த்தனரி தமிழ்நாடு விவசாய சங்க மாநிலக்குழு உறுப்பினர் பி தர்மலிங்கம், டாக்டர் கங்காதரன் ஆர் பி ராமசாமி, பி ராஜூ எஸ் முத்துக்கிருஷ்ணன், சந்தாயி ரெங்கசாமி, எஸ். டி. சின்னச்சாமி, வி கே. ராஜூ, சி ராமசாமி, ஏ. ராமன், எம் நடுதம்பி ஆகியோர் பேசினர்.

இறுதியில் மலைவாழ் விவசாயிகள் உழுது வரும் நிலங்களுக்கு உடனே பட்டா வழங்கக்கோரியும், லேவாதேவிக்கடன் தொல்லையிலிருந்து விடுபடவும், கூட்டுறவு நாணயச்சங்கம் ஏற்படுத்தும்படியும், மலைகள் மீது போதுமான சுகாதர நிலயங்களையும் பள்ளிகளையும் நிறுவும்படியும், போக்குவரத்துப் பாதைகளை உடனடியாக அமைக்கும்படியும், காட்டிலாக அதிகாரிகளின் வசதிபடைத்த முதலாளிகளின் திமிர்பிடித்த அக்கிரமங்களை நிறுத்தக் கோரியும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சேலம் மாவட்டத்திலுள்ள மேற்கூறிய மலைகளின் மீது செங்கொடிகள் பறக்க ஆரம்பித்த பிறகு தான் முன் கூறிய அட்டகாசங்கள் குறைந்துவிட்டன என்று சில விவசாயிகள் மாநாட்டில் பேசிக் கொண்டனர்.

மாநாடு முடித்தபின் ஆயிரம் பேருக்கு அதிகமான விவசாயிகளின் உணர்ச்சி மிக்க ஊர்வலம் ஆத்தூர் நகரையே அதிரச்செய்தது.

இறுதியில் மதுரை மாணவாளன் குழுவினரின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

---

விருதுநகரில்

## சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி

விருதுநகர், மே. 13—

விருதுநகரில் சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணி துவக்கப்பட்டது,

கடந்த 3ந் தேதியன்று அமைக்கப்பட்ட இம்முன்னணியின் தலைவராக கே கணபதி, துணைத்தலைவராக சங்கரன், செயலாளராக எஸ் எஸ் பிச்சை, உதவிச்செயலாளராகவெங்கடாசலம், பொருளாளராக பூலையவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்

இதன் துவக்க விழாக் பொதுக்கூட்டத்தில் வாலிபர் முன்னணிக் கொடியை ஏற்றி வைத்து 'தீக்கதிர்' உதவி ஆசிரியர் ஐ. மாயாண்டிபாரதியும் மற்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சாத்தூர் தாலுகாச் செயலாளர் எஸ் ஏ பெருமாள், நகரச் செயலாளர் பி சீனிவாசன், எஸ் கே ராஜேந்திரன், போத்தநதி, எஸ் சுப்பா ரெட்டி, எம் பி சிவன் ஆகியோர் பேசினர்.

---

## இரண்டே வருடத்தில்............

(1-ம் பக்க தொடர்ச்சி)

இருப்போரின் எண்ணிக்கை வெகுவேகமாக உயர்வது ஹரியானவில்தான். அம்மாநிலத்தில் 1972-டிசம்பர் வரை 5 லட்சத்து 47 ஆயிரம்பேர்படித்து விட்டுவேலை இன்றி இருந்தனர், 74-ல் அவர்களின் எண்ணிக்கை 11லடசத்து 64ஆயிரத்துக்கு பறந்து உயர்ந்து விடடது.அதாவதுஇரண்டே வருடத்தில் 112.80 சதவீதம் உயர்வு

ஹரியானவுக்கு அடுத்த இடத்தை பிடிப்பது தமில்நாடு 1972-ம் ஆண்டின் டிசம்பர் 31-வரை21லட்சத்து 46 ஆயிரம் பேர் வேலையின்றி இருந்தனர். 1974—டிசம்பர் 31 ந் தேதி கணக்கப்படி அவர்களின் எண்ணிக்கை 33 லட்சத்து 32 ஆயிரம் பேராகும். அதாவது 55.27 சதவீத உயர்வாகும்..

மேலும், கேரளத்திலிருந்து படித்தவர்கள் நாட்டின் பல பாகங்களுக்கும் வேலைவேடி இடம்பெயர்வது உண்டு. அதே நிலையை தமிழ்நாட்டவர்களும் கடைப்பிடிகக ஆரம்பித்து விட்டனர்.

வேலை தேடி பிழைப்புத்தேடி பல்வேறு மாநிலங்களை நோக்கி படித்த இளைஞர்கள் ஏராளமானோர் தமிழ்நாட்டிலிருந்து செலகின்றனர்.

மிகச்சிறிய மாநிலமான கேரளாவில் 1972 டிசம்பர் 31ல் 25 லட்சத்து 92ஆயிரம பேர் என்ருல் 74 டிசம்பர் 31ல் 31 லடசத்து 71 ஆயிரம் பேர் வேலை இன்றி உள்ளனர்.

மகாராஷ்டிராவில் 1972 டிசம்பர் 31ல் 29 லட்சத்து 70 ஆயிரம் பேர் என்ருல 74ம் ஆண்டு இறுதியில் 37 லட்சத்து 96 ஆயிரம் பேராக பெருகினர். இம்மாநிலத்தில் பம்பாய் — தாணா, ஹடாப்ஸார் — பூனா — சிஞ்சவாரு ஆகிய தொழிற்கேந்திரப் பகுதிகள் இருப்பதால் நாட்டின பல மாநிலங்களிலிருந்தும் வேலை தேடி இம்மாநிலத்திற்கே வருகின்றனர்.

### காரணம் என்ன?

55 கோடி மக்களுக்கு மேல் உள்ள இந்தியாவில் ஏழை மக்களும், நடுத்தர மக்களும் படிப்பது என்பது பெரும் பிரச்சனை. அப்படிய கஷ்டப்பட்டு படித்தாலும் படித்ததன்பு வேலையின்றி வீதியை அளப்பவர்களாகவும், வேலைதேடி படிகளில் ஏறி இறங்க வேண்டியவர்களாகவும் உள்ளனர். 'சுதந்திர' பாரத புத்திரர்களின் அவல நிலை.

காலப்போக்கில் காலாவதியாகிக் கொண்டிருக்கும் நெருக்கடிக்குள் திணறிக் கொண்டிருக்கும் முதலாளித்துவத்தை காப்பாற்றுவதற்காக, இந்திய பெருமுதலாளிகளை கொழுக்க வைப்பதற்காக இந்திய அரசு கையாளும் கொள்கைகள், திட்ட நடைமுறைகள் தானே இதற்கெல்லாம் காரணம்.

விரல்விட்டு எண்ணக் கூடியவர்களிடம் சமுதாயத்தையே ஒப்படைக்கும் இந்திய அரசின் பொருளாதாரக்கொள்கை காரணமாக நாட்டில் உள்ள கோடான கோடி மக்கள் தினம் தினம் பல்வேறு வழிகளில் செத்து செத்து பிழைக்கின்றனர். படித்த மாணவர்களோமுதலாளித்துவ அராஜகத்திற்குள் தினம் தினம் அரைபட்டு செத்துக்கொண்டிருக்கிருர்கள்.

### திட்டத்தின் விளைவு என்ன

ஆனல் காங்கிரசு அரசின் வாய்வீச்சுக்கு மட்டும் குறைச்சல் இருப்பதில்லை.

'திட்டம்' என்பார்கள் 'திட்ட அமுல்'என்றெல்லாம் ஜம்பம் அடிப்பார்கள் முடிவு...!

படித்து வேலையின்றியிருப்போரின் எண்ணிக்கையை வேகமாக குறைக்கப்போவதாக கூறி கடந்த 3 ஆண்டுகளில் எடுக்கப்பட்ட திட்டங்களையும் நடவடிக்கைகளையும் நடவடிக்கைகளையும் பாருங்கள்.

1. படித்து வேலை இன்றியிருப்போருக்கு அனுகூலமாக மத்தியரசு ஏற்படுத்திய 1971—72-ம ஆண்டுத் திட்டம்.

2. யூனியன் பிரதேசங்களுக்கும மாநிலங்களுக்குமான 72—73-ம் ஆண்டின் விசேஷ வேலைவாய்ப்புத் திட்டம் இதற்கு மத்திய அரசு மட்டும் ஒதுக்கிய நிதி 27 கோடி ரூபாய்.

3. 73—74ம்ஆண்டில 5லட்சம் பேருககு வேலைவாய்ப்பு அளிக்கும் திட்டம்.

மேலும், 4வது 5வது திட்டங்களின் பகுதி திட்டங்களில வேலைவாய்ப்பு பெருக்கத்திற்கான அம்சங்கள் இருநததாக திட்டக்கமிஷன் கூறியுள்ளது.

ஆனல் இறுதி விளைவு என்ன?

இரண்டே வருடங்களில்28 சதவீதம் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிப்பு.

ஆதாரம்;
'இந்தியன் எக்ஸ்பிரஸ்'
12—5—75

---

விடுதலைப் படையினரால்

## விரட்டப்பட்ட ஓநாய்கள் பாரிசிலிருந்து குலைக்கின்றன

பாரிஸ், மே- 11—

கம்போடியாவில் 'கம்யூனிஸ்டுகளின்சர்வாதிகாரம்' 'நடக்கிறதாம். அதிலிருந்து கமபோடியாவை விடுவிக்க முன்னைவிட மிகப்பெரிய யுத்தத்தை மிகக்குறுகிய காலத்தில் ஆரம்பிக்கப்படுமாம். இவ்வாறு கம்போடிய விடுதலைப்படைகளால் விரட்டப்பட்ட ஓநாய்கள் பாரிசில் போய் குரைக்கின்றன.

விடுதலைப் படைகளால் துரத்தியடிக்கப்பட்ட அமெரிக்க ஏகாதிபத்திய அடிவருடிக் கும்பல் கம்போடிய தேசியவாதிகளின் குடியரசு நடவடிக்கை முன்னணி என்றும் கம்போடிய விடுதலை முன்னணி என்றும் என்றும் பெயர் வைத்துக்கொண்டு ஒரு கூட்டு அறிக்கை வெளியிட்டுள்ளனர்,

கம்போடியாவில் சிவப்பு விடுதலைபபடைகள் இரக்கமற்ற நடவடிக்கைகளை எடுக்கின்றனர் சொத்துக்களையெல்லாம் பறிமுதல் செய்கின்றனர் என்றுஅந்த அமெரிக்க அடிவருடிகள் ஓலமிட்டுள்ளனர்.

இம்மாதிரியான இரக்க

(8ம் பக்தி பார்க்க)

---

## தோட்டத் தொழிலாளர் மாநாடு........

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆகியோர் பேசினர்.

### நெல்லின் கீதம்

கூட்டத்தின் இறுதியில் நள்ளிரவு வரை, வி. சாம்பசிவம கலைக்குழுவினரின் 'நெல்லின் கீதம்' என்ற கலைநிகழ்ச்சி நடந்தது.

### பிரதிநிதிகள் மாநாடு

பிரதிநிதிகள் மாநாடு 12ந் தேதி மத்திய அரசு ஊழியர்களின் ஒப்பற்றத் தலைவராகஇருந்துகாலமான தோழர் கே ஜி போஸ் நினைவாக அமைக்கப்பட்டுள்ள 'கே ஜி போஸ் நகரில்' (கே ஆர் டி தியேட்டர் தோழர் கே பத்மநாபன் தலைமையில் துவங்கியது.

மாநாட்டின் முதல் நிகழ்ச்சியாக உழைப்பாளி மககளின் உரிமைப் போராட்ட செங்கொடியை தோழர் மனோரஞ்சன் ராய் முழககங்களுக்கிடையேஏற்றிவைத்தார். அடுத்து, தியாகிகள் சின்னத்துக்கு அஞ்சலி செலுத்திய பின்பு மாநாடு துவங்கியது.

மாநாட்டுத் தலைவரின் உரைக்குப் பின்பு பொதுச் செயலாளர் தோழர் மனோரஞ்சன் ராய் சமர்ப்பித்த அறிக்கையின் மீது பல தோழர்கள் விவாதம் நடத்தினர்.

இம்மாநாட்டில் தோழர்கள் பி ராமமூர்த்தி, ஏ பாலசுப்ரமணியம், சி ஐ டி யூ வின் தமிழ்மாநிலத் தலைவர் கே ரமணி, கேரள மாநிலச் செயலாளர் இ. பாலானந்தன், விமலா ரணதிவே மற்றும் பல தலைவர்கள் கலந்துகொண்டனர்.

---

ஆற்காடில்

## சி.ஐ.டி.யூ. வுக்கு புதிய வரவு

ஆற்காடு: மே. 11—

இந்தியத் தொழிற் சங்கத்துடன் (சிஐடியூ) இணைவது என்று இங்கு புதிதாக அமைக்கப்பட்ட ஆற்காடு தாலுகா பீடித்தொழிலாளர் சங்கம் முடிவு செய்துள்ளது

ஆற்காடை அடுத்த முப்பது வெட்டியில் இச்சங்க அமைப்புக கூட்டம் தோழா ஆர். கன்னியப்பன் தலைமையில் கடந்த 7 ந்தேதி நடந்தபோது இம்முடிவு எடுக்கப்பட்டது.

இதில் மாவட்ட பீடித் தொழிலாளர் சங்க நிர்வாகக்குழு உறுப்பினா ஆர். ஏ. கண்னன், கலந்துகொண்டு கோரிக்கைகளை வற்புறுத்தி பேசினர். மற்றும் கிருஷ்ணன், வேலன், தனபால், ப்ரசுராமன் ஆகியோரும் பேசினர்.

சங்கத்திற்கு புதிய நிர்வாகிகள்தேர்ந்கெடுக்கப்பட்டனர்.

கௌரவத் தலைவராக ஆர் ஏ. கண்ணன், தலைவராக ஏ. எம கிருஷ்ணன். உதவித்தலைவராக ஏ. எம். வேலன், செயலாளராகசாத்தூர் எஸ். எம். பரசுராமன். உதவிச்செயலாளராக டி. தனபால பொருளாளராக ஆர். கன்னியப்பன் மற்றும் 11 பேர் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக தோந்தெடுக்கப்பட்டனர்.

---

## மே தின விழா

பழனி. மே. 13—

பழனித்தாலுகா சத்திரப்பட்டியில் மேதின விழாவும். தென் வியட்நாம் கம்போடியா வெற்றி விழாவும் பல இடங்களில் செங்கொடிகள் ஏற்றி சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

மாலையில் ஊர்வலமும் பி. கிருஷ்ணன் தலைமையில் பொதுக்கூட்டமும் நடந்தன. எம். கருணாகரன, கே. சண்முகவேலு.

மதுரை-முகவை மாவட்ட விவசாயிகள சங்கச் செயலாளா வி. ஏ. கருப்புசாமி ஆகியோர பேசினர்.

ஆரம்பத்தில் ஏ. முருகேசனும், வி ஆர். கருப்பணனும் நடோடிக்கலை நிகழ்சிப் பாடல்கள் பாடினர்.

### வேலூர்

சத்திரப்பட்டி வேலூரில் 5ந் தேதி விவசாயிகள் சங்கத்துவக்கவிழாவும் மேதினமும சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. சாமாண்டு தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் எம் கருணாகரன், பி கே கடவுள், கே சண்முகவேலு, பி கே கருப்புசாமி ஏ எஸ் காளிமுத்து வீர கருப்புசாமி ஆகியோர் பேசினர்.

இறுதியில் மதுரை குமார் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி நடந்தது.

### மேட்டூர் அணையில் ஆர். உமாநாத்

சேலம் கேம்ப் கட்சிக்கிளை சார்பில் மேதின விழாவை யொட்டி கடந்த 7ந் தேதி வி எம் நாராயணன் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது.

கட்சியின் மாவட்டச்செயலாளர் கே எஸ் அர்த்தநாரி, மேட்டூர் பிரதேசக் கமிட்டிச் செயலாளர் எம்.ராஜகோபாலன் ஆகியோர் பேசிய பின்பு தமிழக சிஐடியூ செயலாளர் ஆர் உமாநாத் பேசினர்.

தேங்கல்வாரையில்8ந் தேதி வாத்தியார் கந்தசாமி தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. எம் ராஜகோபாலன், பி அமரப்பன் பேசினர். இறுதியில் மதுரை மணவாளன் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி நடந்தது

### புதுகாம்பள்ளி

இங்கு கே பெருமாள் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் எம் ராஜகோபாலன், எம் சீரங்கன் கே எஸ் அர்த்தநாரி பேசினர். இறுதியில், மதுரை மணவாளன் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி நடந்தது.

### தூத்துக்குடி

மே 4ல் தூத்துக்குடி கரிக்களத் தொழிலாளர்களும்மற்றும் பல தொழிலாளர்களும் குடும்பத்தோடு மாட்டு வண்டிகளில் ஏறிவர ஆட்டபாட்டங்களுடன் மேதின ஊர்வலம் நடத்தினர்கள். ஊர்வலத்துக்கு தோழர்கள் வி சங்கரநாராயணன் (அண்ணாச்சி) சாமிதாஸ் தலைமை தாங்கினர்,

'தீக்கதிர்' உதவி ஆசிரியர் தோழர் ஐ மாயாண்டிபாரதி இரண்டு இடங்களில் செங்கொடி ஏற்றி வைத்ததுடன் பொதுக்கூட்டத்திலும் உரையாற்றினர்.

### திக்கணங்கோடு

குமரிமாவட்டம்திக்கணங்கோடில் மார்க்சிஸ்ட் கட்சி சார்பில் மே 11-ல் மேதின விழா கொண்டாடப்பட்டது.

தோழர் எம். ஓ. சுந்தர் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் ஐ. மாயாண்டிபாரதி, அச்சுதன், ஏ. நடராசன் முதலியோர் பேசினர்கள்.

### ஆலங்குளம்

ஆலங்குளம் சி ஐ டி யூ அலுவலகம் முன செங்கொடியேற்றி மேதினவிழா கொண்டாடப்பட்டது.

இரவில் தோழர்ராமசாமிப் பாண்டியன் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் எஸ். ஏ. பெருமாள், பி கிருஷ்ணசாமி. செல்லையா மேலாண்மை செ, பொன்னுச்சாமி, சீதா—தவமலர் பேசினர்.

---

(6-ம் பத்தி தொடர்ச்சி)

மற்ற நடவடிக்கைகள் கம்போடியாவை மீண்டுமொரு யுத்தத்திற்குள் கொண்டு செல்லுமாம். அந்த யுத்தம் கடந்த யுத்தத்தைவிடகொடுமையானதாகவும் குறுகிய காலத்தில் ஆரம்பிக்கப்படுவதாகவும் இருக்குமாம்.

மேலும் அவ்விரண்டு ஸ்தாபனங்களும 'வெளிநாட்டில் அரசாங்கம் அமைத்து' கம்போடியாவில் 'உண்மையான சுதந்திரமான குடியரசு' திருப்பவும் அமைக்குமாம்.

இந்த கூட்டறிக்கையில் சாங்காக்தான், ஓக்வான்சாத் கியோ சௌவதனு, வான்டா வருத் என்னும் அமெரிக்க கைக்கூலிகள் கையொப்பமிட்டனர்.

---

## அமெரிக்க இராணுவ தீவில் லான்நால் மாளிகை வாங்கினன்

ஹோனலுலு, மே. 13—

பசிபிக் மாகடலிலுள்ள அமெரிக்க இராணுவதளமான ஹவாய்தீவின் தலைநகரான ஹோனலுலுவில் கம்போடியாவிலிருந்து ஓடிப்போன அமெரிக்க கைப்பாவை ஜனதிபதிலான்நால் குடியேறியிருக்கிருன்.

கம்போடியாவில் அவன் ஜனதிபதியாக இருந்த கடைசிநாட்களில் அவனை எப்படியாவது வெளிநாட்டுக்கு விரட்டிவிட வேண்டுமென்று கம்போடியாவிலுள்ள இதர அதிகாரிகள் கருதினர்கள்.

இந்த லான்நால் மேலும் தொடர்ந்து. பதவியில்இருந்தால். யுத்தம் மேலும் பல நாட்கள் நீடித்து பெரும் சேதம் ஏற்படுமென்று அஞ்சியே இவனுக்குச் சீட்டுக் கொடுக்கவிரும்பினர்கள்.

ஆனல் இந்தப்பிசாசு இலேசில் போவதாக இல்லை 10 லட்சம் டாலர் கொடுத்தால்தான் ஜனதிபதி பதவியைத்துறந்து வெளியேறுவேன் என்று சண்டித்தனம் செய்தது.

எப்படியாவது போய்த் தொலைந்தால் சரி என்று அதிகாரிகள் சம்மதித்தார்கள்.

இந்தக் குட்டை,லான்நாலுக்குப் பிறகு சிறிது காலம் ஜனதிபதியாக இருந்த இன்னொருவர் உடைத்து விட்டார்.

ஓடிப்போன லான்நாலுக்கு கோபம் மூக்கை முட்டிக் கொண்டு வந்தது. 'நான் 10 லட்சம் டாலர் வாங்கவில்லை. 1 லட்சம் டாலர்தான் கொடுத்தார்கள். தங்கக் கட்டிகளும் எடுத்து வரவில்லை. ஹோனலுலு நகரில் 1 லட்சம் டாலருக்கு ஒரு வீடு வாங்கியிருக்கிறேன். அவ்வளவுதான். நான் 10லட்சம் டாலர் லஞ்சம் வாங்கி கொண்டுதான் வெளியேறியதாகச் சொல்லுவதெல்லாம புரளிப் பேச்சாகும். பேரம்தான் நடந்ததே தவிர, லஞ்சம் அல்ல'—என்று மறுப்பு அறிக்கை விட்டிருக்கிருன். மானங்கெட்ட கழுதை!

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில்(6-16 மைனாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுவோர் ஆசிரியர் கே. முத்தையா.